# நினைவுச் சின்னம்

2601

ஏ. சண்முகம்

செல்வி பதிப்பகம்
காரைக்குடி.

பாவேந்தர் பாரதிதாசனார் அவர்கள்

மனமுவந்தளித்த

## மதிப்புரை

பூவில் இனிக்கும் தேனெனப் புனைந்த
பாவில் இனிப்பது "நினைவுச்சின்னம்"
பேரா ஊருணி ஊரா ரான
சண்முகக் கவிஞர் இதனைத் தந்தார்
தமிழகம் ஆத ரிக்கும்
அமிழ்தம் உண்ண அட்டி இராதே.

பாரதிதாசன்

பன்மொழிப் புலவர்

## கா. அப்பாதுரை M.A.L.T. அவர்கள்

அளித்த

# சிறப்புரை

**கவிதை காணீர் !**

**நினைவுச்சின்னம்** எனும் அரிய கவிதைக்கலைப் படைப்பை அடிவிடாமல் எழுத்து விடாமல் படித்து உள்ளத்தினுள்ளாகப் பாடி மகிழும் பேறு எனக்குக் கிட்டியுள்ளது. அளவில் சிறிதாயினும் இழுமெனும் மொழியுடன் விழுமிய சிறுகாவியமாக இச்சிற்றேடு அமைகிறது. காதற்சுவையும் சோகச்சுவையும் பாடல் களில் தாவித்தாவி அலை அலையாகப் பாய்ந்தோடு கின்றன. காதலுடன் சோகமும் சோகத்துடன் காதலும் போட்டியிடுகின்றன. ஆயினும் இக்கடும் போட்டியில் காதல்தான் வெல்கின்றது என்று கூறவேண்டும். நல்ல கதையை விறுவிறுப்புடன் வாசிப்பவர் வைத்த உள்ளம் வாங்க முடியாமல் ஆசிரியர் கொண்டு சென்று, இறுதியில் துன்பத்தின் எல்லையிலே வீறமைதியைக் காட்டி வாசகரைக் கவிக் காட்சியில் ஈடுபடுத்திவிடும் காவியக் கலைஞன் திறம் பெரும்பாராட்டுக்குரியது.

பாரதி பாரதிதாசன் ஊழி இது. இடைக்காலத் தமிழ்க் கவிதைக்கு அக்கவிஞர் உயிர் கொடுத்து விட்டனர். அவர்கள் கவிதைகள் வாழைப்பழக் குலைகளை நினைவூட்டுவன. ஆனால் புத்திளங்கவிஞர்கள் அவ்வெளிமையுடன் மீண்டும் காவியத்தின் தீஞ்சுவை ஊட்டுவதில் முனைந்துள்ளனர். பாரதியாரின் பாஞ்சாலி சபதமும் புரட்சிக் கவிஞரின் புரட்சிக் கவிதையும்

இருபதாம் நூற்ருண்டின் காவியக் கலைப் போக்குக்குக் கலங்கரை விளக்கங்கள் ஆகும். அவற்றின் வழிநின்று புதுவழி காட்டுகின்றனர், "நினைவுச்சின்னம்" எனும் இச்சிறு காவியம் புனையும் பேராவூருணிக் கவிஞர் சண்முகம் போன்ற எழிற் கலைஞர்கள். அவர்கள் கவிதைகள் பலாச்சுளைகளை நினைவூட்டுகின்றன. பாரதி பாரதிதாசன் கவிதை களிலும் காவியத்திலும் நாடகச் சுவையே முளைத்தெழு கின்றன. பல்சந்தம் போட்டுக் கம்பரைக் காவியத்தில் நாடகப்பாங்கு காட்டுபவராக்குவதுபோலவே, அவர்கள் கவிதையிலே காவியப் போர்வையில் நாடக எழுச் சியையே காண்கிருேம்.

ஆனுல் 'நினைவுச்சின்னம்' தொட்டமுதல் இறுதி வரை ஒரு பாய்ச்சலில் செல்கிறது. பாயுழி ஒன்ருயினும் அது உணர்ச்சி பலவாகப் பல்வகை இனிமையூட்டு கிறது. தேவைக்குமேல் உணர்ச்சி பல்வகைப்படாத தனுலும், உறுப்புக்களும் வருணனைகளும் காவிய எல்லை கடவாமல் அடங்கி நடப்பதாலும், முன்னைய கவிதை களில் காணுத காவிய ஒருமைப்பாட்டை 'நினைவுச் சின்னம்' காட்டுகிறது.

பாரதி பாரதிதாசன் புகழ் இருபதாம் நூற்ருண்டில் நெடுநடை போடுகிறது. இருவரையும் அடியொற்றிப் பின்பற்றும் நிலையைத் தமிழ்க்கவிதை அடைந்து வருகிறது. ஆயினும் காவியத்துறையில் இளம் கவிஞர் கம்பர் காலமுதல் பாரதிதாசன் காலம் வரை நீடித்த மரபினைப் பிழிந்தெடுத்து, புதுவழி காட்டி வருகின்றனர் என்னலாம். கவிஞர் கண்ணதாசனின் மாங்கனியுடன் இக்கவிஞரின் நினைவுச் சின்னத்தையும் இப்புது முறைக்குரிய வழிகாட்டிகளாகக் கொள்ளலாம்,

பண்டைக்கிரேக்க அறிஞர் கட்டுறுத்த மூஒருமைப் பாடுகளும், சமஸ்கிருத அணியிலக்கண மன்னர்கள் கண்ட காவிய ஒருமைப்பாடும் நினைவுச் சின்னத்தில் அழகுற அமைந்துள்ளன. கம்பர் கால முதல் கட்டுக் கடங்காக் குதிரையாக உணர்ச்சியில் கொந்தளித் தோடும் போக்கினை அடக்கி, பழங்கவிஞர்களின் அழகு கெடாமலே, உறுப்பழகை முழுக்கவிதை அழகுக்குள் கட்டுப்படுத்திய இக்காவிய ஆசிரியர் திறம் போற்றத் தக்கதாகும்.

பண்பால் உயர்ந்த பவளம் போன்ற இக்காவியம் புகழ் பெருக்கி, பாரதி, பாரதிதாசன் போன்ற பல்வகைப் பெருக்கமும் இவ்விளங்கவிஞர் பெற்றுயர்வுறல் சாலும் என்று நான் நம்புகிறேன். தமிழகம் வளர் கவிதைகளை ஊக்குவித்துப் புகழ் வளர்க்குமாக.

சேப்பாக்கம்
4—2—63

கா. அப்பாதுரை.

அழகப்பா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்

பேராசிரியர் வித்துவான். பூ. அமிர்தலிங்கனுர் அளித்த

# அணிந்துரை

இளங்கவிஞர் பரம்பரையின் காதல் நெஞ்சின்
எழில்காட்டும் வானவில்லாம் இந்த நூலின்

விளங்குநடை விறுவிறுப்பும் எளிமைப் பண்பும்
வியப்பூட்டும் உவமைகளும் புரட்சி யாப்பும்,

உளங்கவரப் பன்முறையும் உண்டேன்; செந்தேன்
ஒழுகுநறுந் தமிழ்சுவைக்க விரும்பார்
உண்டோ?

வளங்கொண்ட சண்முகத்தை வாழ்த்துகின்றேன்
வாழையடி வாழையென வளர்க வென்றே!

காரைக்குடி
20—3—63

பூ. அமிர்தலிங்கன்

# முகவுரை

உருவ எழிலும் உயர்பண்புகளும் நிரம்பிய ஒரு பருவமங்கையைப் போன்றது கவிதை. அது சின்னஞ் சிறு குழந்தையின் இதழ்களிலே அரும்புகின்ற புன்னகையைப்போன்ற காந்தசக்தி வாய்ந்தது. கற்ருரைத் தனக்கடிமையாக்கிக் களிப்பூட்டுவது. தேன்போல் இனிப்பது. மீன்போல் துடிப்பது. கண்ணீரையும் சிரிப்பையும் காலவெள்ளத்தாலும் அழியாத சொற்களால் வடித்துக்காட்டுவது. இன்றையத் தமிழர்களிடத்தில் இலக்கிய உணர்வு குன்றிவிட்டது. கவிதை என்ருலே தன் அறியாமையால் நிரம்பிவிட்ட கசப்புணர்ச்சியைக் காட்டுகின்றனர். கவிதையைப்பற்றிய ஆராய்ச்சி உணர்வின்மையால் உயர்ந்த கவிஞர்களையும் அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

"நினைவுச்சின்னம்" எனும் இச்சிறு காப்பியம் எனது உள்ளத்தில் ஏற்பட்ட பல்வேறு உணர்ச்சிகளின் ஒரு சிறுவடிவம். அது உங்கள் இதயங்களிலும் நிலைபெறவேண்டும் என்பதே என் ஆவல். இளைஞனுகிய என்னுடைய கன்னிமுயற்சிக்குத் துணைநின்று ஊக்குவித்து மதிப்புரை நல்கிய தமிழ்ப் பேரறிஞர் மூவர்க்கும் யான் என்றும் கடமைப் பட்டுள்ளேன். இந்நூல் வெளியிடுவதில் பேருதவிகள் பலபுரிந்த குருவிக்கரம்பை திரு. மு. கிருட்டிணமூர்த்திஅவர்கட்கும், செல்வி பதிப்பக உரிமையாளர் திரு. வீர. சிவராமனுர் அவர்கட்கும் என் இதயம்கனிந்த நன்றி! தமிழறிஞர் இச்சிறு நூலைத் தம் குழந்தையின் மழலைச்சொல்லென வரவேற்பர் என்ற நம்பிக்கையோடு அவர்தம் திரு முன்னர் இந்நூலைப் படைக்கின்றேன்.

பேராவூருணி
7—4—'63

ஏ. சண்முகம்.

# நினைவுச்சின்னம்

1 அலைகடலில் ஒளிசிந்தும் முத்திருக்கும்
அவள்சிரிப்பில் முத்தொளியின் சத்திருக்கும்
மலைத்தேனின் சுவையறிந்து செப்பு கின்றோர்
மங்கையவள் இதழ்த்தேனுக் கீடில் என்பர்
வளைக்கரங்கள் நீர்மொள்ளும் குடத்தை ஏந்த
வார்கடலின் அலையைப்போல் நடைபயின்று
குளக்கரையில் காவிரிதான் வந்து நின்றாள்
குவளைமலர் மையுண்ட கண்களாக!

2 கொங்கைமலர் குலுங்கிடவே ஊர்வம்பைத்தான்
கொம்புத்தேன் போற்சுவையைக் கூட்டிப்பேசிச்
செங்கைமலர் தன்னாலே குடத்தைப் பற்றிச்
சிரித்தபடி காவிரியின் முன்னர் வந்தே
எங்கெவன்மேல் நின்சிந்தை போக்கி விட்டே
இங்குமனம் தடுமாறி நிற்கின்றாய்சொல்?
பைங்கிளியே என்றந்தப் பாங்கி மார்கள்
பட்டாளம் கேட்டிடவே நாணி நின்றாள்!

3 பாங்கியர்கள் பட்டாளம் சென்ற பின்னர்
பாவையவள் தன்குடத்தில் நீரை மொண்டு
யாங்கிவர்தான் உள்ளாரோ? என்றே எண்ணி
இடையினிலே ஏந்தும்பொற் குடத்தினோடு
பூங்கொடிதான் புறப்பட்டுச் செல்லல் போலப்
புறப்பட்டாள் வழியெல்லாம் விழியைப் பாய்ச்சி
நாங்கள்வாழ் வடைவதுமே எந்நா ளென்று
நன்னெஞ்சை நடராசன் மேலே வைத்தாள்!

2601

4 காவிரியால் வளம்பெற்ற சோழநாட்டின்
கண்ணுகக் காட்சிதரும் தஞ்சைதன்னில்
பூவிரிந்த மலர்க்குழல்சேர் கதுப்புக் கன்னம்
பொன்னெளியை வீசிடவும் கண்டார் நெஞ்சப்
பூவிருந்த தேனுகப் போதை ஊட்டிப்
பொருள்நிறைந்த பெரும்செல்வ வணிகர் வீட்டுக்
காவிருந்த மலராக வாழ்ந்தாள் நெஞ்சக்
கண்களிலே நடராசன் உருவைத் தேக்கி!

5 அந்நாளில் உளம்கவரச் சிற்ப மாக்கி
அறிவுடையார் போற்றுகின்ற கலைஞுக
அந்நகரில் நடராசன் வாழ்ந்தான்! அந்த
அழகுமயில் தனக்கும்நற் றலைவ ஞகி
இந்நிலையில் அவர்காதல் தஞ்சை தன்னில்
எதிர்ப்பைத்தான் தேடிவிட்ட தேற்றத் தாழ்வு
முன்னின்று தடைபோட்டே வேதனைத்தீ
மூட்டிற்ரும் அவர் உளத்தில் துயரைக் கொட்டி!

6 நீர்மொண்ட குடத்தோடு நடந்து சென்று
நினைத்தஇடம் தனையடைந்தாள்! உளியின் ஓசை
ஊர்முழுதும் எதிரொலிக்கச் சிலைவடித்தே
உணர்வெல்லாம் தன்தொழிலில் ஓடவிட்டு
நடராசன் அமர்ந்திருக்கக் கண்டாள்! மெல்ல
நடைபயின்றே அவன்வீட்டுள் நுழைந்து சென்று
மடமயிலாள் நகைவிரித்தாள் மென்மை வாய்ந்த
மலர்க்கமலப் பூவிதழ்கள் தனைவிரித்தே!

7 திடுக்கிட்டு முகம்திரும்பி நடராசன் தான்
“தேமொழியே நீவருக!” என்று கூறித்
தடுக்கிட்டான்; பின்னமரச் சொல்லி விட்டுத்
தையலவள் புறம்சென்றே அணைத்து முத்தம்

தொடுத்திட்டான் முடிந்தஉடன் "இறுதியாகத்
தொடியிடையே உனக்கிந்த முத்தம் தன்னைக்
கொடுத்திட்டேன் பரிசாக, இனிமேல் நம்முள்
கூடலும்தான் இல்லையடி!" என்றான்; நங்கை—

8 'கூடிழந்த பறவையெனச் சிறகடித்துக்
குமுறத்தான் செய்வீரோ? கொள்கையின்றி
நாடிழந்த தமிழ்மகளைத் துயரமுற்று
நலியத்தான் செய்வீரோ அத்தான்?' என்றாள்
'வாடாத மல்லிகையே, உன்னை நெஞ்சில்
வைத்ததனால் நான்பிழைத்தேன் ஆனால் இங்கே
கூடாத சிலபேசி என்னை நீயும்
கொல்லத்தான் பார்க்கின்றாய், கேட்பாய் கண்ணே!

9 அசையாத கல்லைப்போய்த் தில்லை மன்றில்
ஆடுகின்ற சிவனாகப் புலவர் கூட்டம்
இசைபாடும் மாலாக, பிரமன் ஆக
இந்நாட்டின் கடவுளரைப்படைத்த தெல்லாம்
விசையற்ற தறியைப்போல் நாளும் காதல்
வேதனையால் தவிக்கின்ற நான்பிறந்த
இசைமிகுந்த கூட்டத்தின் கரங்களன்றோ?
எம்மவரின் கரம்பட்டுக் கடவுளான—

10 'சிலையைப்போய் இந்நாட்டு மக்க ளெல்லாம்
சிவனென்றும் அரியென்றும் வணங்கலானார்
நிலையற்ற வாழ்க்கையிலே அழிவில்லாத
நிகரில்லாச் சிற்பத்தை வடித்து வைத்துக்
கலைமகளின் காலடியில் களித்து வாழும்
கலையறிந்த எம்மினத்தை இந்த நாட்டார்
அலைகடலின் துரும்பைப்போல் ஒதுக்கி வைத்தே
அறியாமைப் பிணியாலே இழிவு தந்தார்!

11 ‘காக்கை நிறம் போல்மனிதர் நெஞ்சம் கூடக்
கறுத்திருக்கும், இருட்டறையாய் மாறி நிற்கும்!
நீக்குண்டம் போலவர்தம் சிரிப்புக் கூடத்
திகழுமதில் நஞ்செல்லாம் தேங்கி நிற்கும்!
பிறர்செய்யும் வஞ்சகத்தால் நமது வாழ்வும்
பேய்க்காற்றில் மரம்போல வீழ்ந்த போதும்
அறம்கெட்டுத் தீநெறியில் வாழ்வடைந்தார்
அவனியின்கண் ஓர்நாளில் மாய்வதன்றி—

12 ‘நிலையாகத் தம்வாழ்வை அடைந்த துண்டோ?
நினைத்துப்பார் பெருங்கடலின் நீரில்தோன்றும்
அலைபோலக் கரைகண்டு முடிவில் மோதி
அழிவதுதான் உலகியற்கை! இதனையன்றி
நிலையாகத் தன்னுடலை நிறுத்தி இந்த
நீணிலத்தில் வாழ்ந்தவர்கள் எவரும் இல்லை!
மலைகூட உளிபட்டுச் சிதறும் போது,
மனிதனிதில் எம்மட்டு? கேட்பாய் மேலும்!

13 ‘நெஞ்சத்தால் செயல்திறத்தால் அறிவால் இந்த
நிலமதிலே நிலைத்தபுகழ் அடைவ தன்றிப்
பஞ்சைப்போல் தீப்பற்றிச் சாம்பலாகும்
பாழுமுடல் தன்னாலே நிலைத்தல் என்றும்
அஞ்சுகமே இல்லையடி! இந்தப் பூமி
அத்தகைய மனிதர்களைச் சுமப்ப தில்லை
நஞ்சான இவ்வாழ்வில் அழிவில்லாத
நற்கலையைப் பரப்புவதே என்றன் கொள்கை!

14 ‘எரிமலைவாய்ப் பறக்கின்ற தூசைப் போல
எனையெடுத்து வீசிடுவார் இந்த நாட்டார்,
உரியமண மகன்தேடி அவன்கரத்தில்
உனையீந்து மகிழ்ந்திடுவார் உனது வீட்டார்

அறியாத சிறுவனல்ல யானும்! என்னை
அகற்றிவிடு பெண்ணேயுன் அகத்தி னின்று!
வறியவனே என்ருலும் கலைக்காகத்தான்
வாழ்கின்றேன் பிறர்க்கஞ்சல் என்றும் இல்லை!!'

15 என்றுநட ராசனுமே இயம்பிப் பின்னர்
எடுத்தஉளி தனைப்பிடித்துச் சிலைவடித்தான்!
'நன்றிதுவோ நவின்றிடுவீர், அன்பே! உம்மை
நங்கையிவள் மறந்திடுதற் கியலு மாமோ?
இன்றிங்கு யாதுரைத்தீர்? இதனில் சாதல்
இனியதுவாம் நமக்கதனுல் இங்கிருந்தே
இன்றிரவே நாம்ஓடி விடுவோம், அத்தான்!
இறப்புவரின் அதைஇணைந்தே பெறுவோம்நாமும்!

16 'கோழிநிறம் தனையொத்து முட்டை தானும்
கொண்டநிறம் மாறுவதும் உண்டோ சொல்வீர்!
தாழம்பூ தன்மெருகை இழந்திட் டாலும்
தன்மணத்தில் சிறிதேனும் குன்றல் உண்டோ?
சூழ்நிலையால் நாமிணைந்தோம் காதல் தன்ருல்,
சுற்றத்தார் இதற்காக எனைக் கடிந்தார்
ஏழ்மையினுல் பிறர்செய்யும் வஞ்சகத்தால்,
இறந்தாலும் நம்காதல் இறவா தன்ருே?

17 'நான்உமக்கே உரியவள், நீர் இதைமறுத்தல்
நன்றில்லை!' என்றவளும் அழுது நின்ருள்!
'வான்வில்லின் அழகெல்லாம் ஒன்ருய் வார்த்த
வரைப்படமே! உனைப்பிரிந்தே எந்த நாளும்
நான் வாழ்தல் இல்லையடி, ஆனுல் இந்த
நாட்டவரும் பேரரசும் ஒப்பா தென்றே
நான்வருந்திச் செப்பிவிட்டேன் நீயுரைத்த
நல்லுரையால் நாம் வாழ வழியும் கண்டேன்!

18 'காதலரை வாழவிடா இந்த நாட்டைக்
கடந்திடுவோம் கண்காணு நாடு செல்வோம்
சாதல்நமை வென்ருலும் இணைந்தே சாவோம்
தவருமல் நடுநிசியில் புறப்பட்டேவா!
பாதமல ரால்நீண்ட வழிகடந்து
பறந்திடுவோம் பொன்வண்டே இங்கிருந்தே!
ஆதவனைப் போலொளியை அள்ளி வீசும்
அழகான முத்துவட மேநீ செல்வாய்!!'

19 என்றவனும் காவிரிக்கு விடை கொடுத்தே
இரவினிலே அவளோடு தப்பிச் செல்ல
நின்றிருந்தான் தன்வீட்டில், சிந்தை எல்லாம்
நேரிழையாள் தன்னுருவைத் தேக்கி வைத்தே!
உரைத்தபடி இரவினிலே அவளும் வந்தாள்
உடன்சேர்ந்தான், இருவருமே பறந்து சென்ருர்
சிரித்தபடி இருவரும்மா மல்லன்நாட்டைச்
சென்றடைந்தார் எல்லையிலோர் சிறிய ஊரில்—

20 குடிலமைத்து வாழ்க்கையினைத் தொடங்க லானுர்
குறைவற்ற இன்பத்தில் மூழ்க லானுர்!
படியரிசி தனக்காக நடராசன் தான்
பழந்தொழிலால் கலைவளர்க்கத் திட்ட மிட்டான்!
இவ்வண்ணம் அவர்வாழ்வு நடக்க அந்த
எழில்நிலத்தை ஆண்டமா மல்லன் சிற்பி
கைவண்ணம் கேட்டான்மா மல்லை தன்னில்
கலைவளர்க்க எண்ணியுடன் அழைப்பும் விட்டான்!

21 நெஞ்சினிலும் வாழ்வினிலும் அங்கம் பெற்ற
நேரிழையாள் காவிரியின் முன்னர்ச் சென்று
புன்சிரிப்பால் என்மனத்தில் குடிபுகுந்து
போதைதரும் பொன்னுருவால் என்னை வென்ற

அஞ்சுகமே! இந்நாட்டை ஆளும் வேந்தன்
அழைப்பெனக்கு விட்டுள்ளான், அவன்தன் நாட்டில்
தஞ்சைநகர் போலுயர்மா மல்லை தன்னில்
தன்னேரில் சிலைவடிக்க! விடைதா' என்றான்!!

22 வண்ணத்துப் பூச்சிபெற்ற சிறகைப் போல
மனம்கவர்ந்த இமையிரண்டும் படபடக்கக்
கண்ணீரை ஏந்துகின்ற விழிகளோடு
காவிரிதான் முன்வந்து நின்றாள், துன்ப
எண்ணத்தை வரைப்படமாய்ப் போட்ட கண்ணீர்
இருதுளிதான் அவள் மார்பில் வழிந்தே யோடப்
பெண்ணவள்தான் பேசுதற்கு வாய்திறந்தாள்—
பேசும்வாய் வழியுதிர்ந்த தெல்லாம் விக்கல்!

23 'சிற்றுளியை எழுதுகின்ற மைக்கோல் ஆக்கிச்
சிறப்புமிகும் கவிதையினைக் கல்லில் ஆக்கும்
அற்புதத்தைச் செய்கின்றீர், அத்தான்! சிற்பம்
அழுவதில்லை சிரிப்பதில்லை துன்பத் தாலே
பொங்குகடல் போலுப்புக் கண்ணீர் தன்னை
பொலபொலவென் றேயாண்டும் வடிப்பதில்லை
தங்கிளையைப் பிரிந்திட்ட பிரிவினாலே
தடங்கெட்டே உளம்வெந்து மாண்டதில்லை!

24 எனைவிடுத்துப் போகின்றீர் அன்பே; உம்மை
இழக்கவில்லை என்றாலும் பிரியும் நாட்கள்
எனைமடுக்கப் போகின்ற தனிமை நாட்கள்,
எழில்நிலவும் இதயத்தை வாட்டும் நாட்கள்!
பூமகளை ஒளிக்கரத்தால் கதிரவன்தான்
புன்னகையோ டணைத்தின்பம் கொள்ளல்போல
நாமணைத்து முத்தமிட்டே இன்பம் சேர்க்கும்
நாட்களையும் இழப்பேனோ?' என்றாள். சிற்பி—

25 'மாமல்ல புரமாளும் மன்னவன்தான்
மணிமொழியே! எனையழைத்துச் சிற்பமாக்க
வாவென்றே ஆள்விட்டான்: நானே சிற்பம்
வடிக்கின்ற நாளாகும்; உனைப்பிரிந்தே
ஏழையிவன் செல்லுதற்கும் மனம்தான் இல்லை;
இருந்தாலும் கடமையினில் தவற லாமோ?
ஏழையிவன் மாமன்னன் ஆணைதன்னை
ஏற்கவில்லை என்றாலென் தலையும் போகும்!

26 'விரிவானில் திரிகின்ற வெள்ளித் தட்டாம்
வெண்ணிலவும் நின்முகத்திற் கீடோ வென்று
புரியாமல் புலம்புகிறேன்; நெஞ்சப் பொய்கை
பூத்ததொரு மலராக விளங்கும் உன்னை
ஒருநொடியும் பிரியத்தான் உள்ளம் இல்லை,
உளியெடுத்த காரணத்தால் பிரிகின்றேன்யான்
சருகாய்என் அகமலரும் வாடித் துன்பச்
சாக்கடையில் வீழ்ந்ததனை அறியா யோநீ!'

27 என்றந்தச் சிற்பியும்தான் பிரிவினாலே
இதயத்தில் துன்புற்றுச் செப்பும் வேளை
நின்றுப்புக் கண்ணீரை உகுத்து நொந்த
நீலவிழிக் காவிரியும் அவனை நோக்கிக்
கூந்தலுக்கு மலரானீர், கண்களுக்குக்
குளிர்ச்சிதரும் உருவானீர், அத்தான்! இந்த
ஏந்திழைக்கோ உயிரானீர்! நெஞ்சக் காதல்
இருவரையும் இணைத்திடவே ஓடி வந்தோம்!!

28 'இன்றேநீர் எனைவிடுத்துச் செல்லுதற்கே
எப்படித்தான் துணிந்தீரோ அத்தான்? ஈதும்
நன்றேநீர் நவின்றிடுவீர், நரிகள் வாழும்
நடுக்காட்டில் ஆட்டைத்தான் விடுதல் போல—

இன்றேநீர் எனைவிட்டே போகலானீர்
இதுசரியோ? இதுமுறையோ? எனக்கும் தங்கள்
குன்றன்ன தோள்களையே உரிமை யாக்கிக்
கூடிவர இசைந்திடுவீர்' என்றாள் மங்கை!

29 'எழில்சிந்தும் சித்திரமே! உன்னை யானும்
என்னோடு கொண்டுசெல அஞ்சு கின்றேன்
வழியெல்லாம் கள்ளர்பயம் அழகு மாதர்
வாழ்வதற்கு மாமல்ல புரத்தில் பொல்லார்
விழிதப்பல் வேண்டுமடீ! தவறி விட்டால்
வேல்விழியே உன்கற்பும் உயிரும் போகும்!
அழியாத கற்சிலையை ஆக்கும் என்றன்
ஆவியுடன் கலைபோகும் உனைப்பிரிந்தால்!'

30 என்றவனும் இயம்பியவள் கரத்தைப் பற்றி
இன்னுடலைத் தன்னோடு சேர்த்து முத்தம்
கன்னலெனப் பன்னூறைக் கொடுத்து விட்டுக்
காவிரியைத் தன்மார்பில் தவழ விட்டான்!
பண்ணூறும் பாட்டவளும் கலைஞன் மார்பில்
பவளத்தார் போல்புரண்டாள், முத்தம் பெய்தாள்
கண்ணிரண்டும் இமைக்காமல் அவன்கழுத்தைக்
கமலமலர் போற்கரத்தால் தழுவி நின்றாள்!

31 'விழியைத்தான் நிரந்தரமாய் இமைபிரிந்தே
விளங்குவதும் உண்டோசொல் இன்ப ஊற்றே!
தொழிற்கலையைக் காட்டுதற்குச் செல்லு கின்றேன்
தொடர்ந்துனை நான் பிரிவதற்கும் இயலு மாமோ?
அலைபிரிந்த கடலிந்த உலகில் உண்டோ?
ஆருயிரே உனைப்பிரிந்தால் வாழ்க்கை யுண்டோ?
நிலையற்ற வாழ்வினிலே என்றன் நெஞ்சில்
நிலைத்தவளும் நீதானே! துயரம் ஏனோ?'

32 'வளைந்தோடும் பேராற்றின் பாதை போல
வாழ்க்கையுமே பலநிலைகள் கொண்ட தாகும்;
நெளிந்தோடும் நீரோட்டம் போலக் காதல்
நினைவுகளும் மனமலரைக் கசக்கிப் போடும்!
எளியேனைக் காதலித்தே ஓடி வந்த
இன்னமுதே! இந்நாளில் உனைப் பிரிந்து
வெளியுலரும் தாமரைபோல் வாட லானேன்
வரையாத ஓவியமே! அழகின் ஊற்றே!!

33 'சாகாத இலக்கியமே, தென்றல் காற்றில்
சதிராடும் பூச்சரமே! உனைப் பிரிந்து
போகின்றேன் இந்நாளில் என்ற போதும்
புகழோடு திருவடைந்து விரைவில் மீள்வேன்!
தேமதுரத் தமிழ்க்குமரி போலும் உன்றன்
திருஉருவை மாமல்லை தனில் வடிப்பேன்
பாமதுவைப் போலினிக்கும் காதற் பாவாய்,
பனிமலர்போல் இதழ்விரித்து விடைநீ ஈவாய்!!

34 சுடுகாட்டைத் தவிரமற்ற இடத்திற் கெல்லாம்
சுயமாகச் சென்றுவரும் ஆற்றல் நெஞ்சில்
கடல்போல விரிவெய்தி உரமும் பெற்றுக்
கரையின்றிப் பரந்திருக்கும் போதேன் நீயும்
கலங்குகிறாய், கண்ணீரைச் சிந்து கின்றாய்?
கனிமொழியே! கரிக்கின்ற உப்புக் கண்ணீர்
நலங்கெட்டுத் துயரடையும் போது கொட்டும்
நகைபோலும் மாதர்க்கே' என்றுரைத்தே—

35 காவிரியைச் சிலைவடிக்கும் கரத்தால் பற்றிக்
கனிந்திட்ட முத்தமொன்றும் அளித்துப் பெற்றான்
பூவிரிந்த மலர்த்தார்போல் மங்கை அன்பன்
பொன்மார்பில் புரண்டிடலே ஆனா ளந்தோ!

பூந்தென்றல் தழுவல்போல் தழுவி இன்பப்
போதையினை நரம்புகளில் ஊட்டு வித்த
ஏந்திழையாள் துயரோடு விடையும் தந்தாள்.
"இயன்றவரை விரைவினிலே திரும்பு கின்றேன்!'

36 என்றந்தச் சிற்பிமொழி இயம்பிப் பின்னும்
'என்னுயிரே உனைப்பிரிந்து வாழும் நாட்கள்
மன்றத்து மாப்புலவர் செந்தமிழ்த் தேன்
மாந்தாது வாழுகின்ற வீணு ளாகும்!
உனைவிடுத்துச் செல்கின்றேன், அன்பே! நெஞ்சம்
உனைப்பிரிய ஒப்பவில்லை; அரசன் ஆணை
எனையடிமை ஆக்கிற்று! செல்கின்றேன்யான்,
என்னவளே உன்னுருவைச் செதுக்கு தற்கே!'

37 எனக்கூறிக் காவிரியைப் பிரிந்து சென்றே
இளஞ்சிற்பி மாமல்ல புரத்தை நோக்கித்
தனக்குரிய தொழில்நாடிச் செல்ல லானுன்;
தளிர்மேனி கொஞ்சுகின்ற காதற் பாவை
மனக்கூண்டில் சிறகடித்துப் பறக்க லானுள்!
மாங்கனியின் சுவையொத்தாள் தன்னை எண்ணி,
எனக்கிந்த உலகத்தில் அவளை அன்றி
இவ்வுளிதான் உண்டன்றி வேறும் உண்டோ?

38 'இவ்வுளிதான் அவளிடத்தில் இருந்தே என்னை
இந்நாளில் பிரித்ததுவாம் என்றே நொந்து
செவ்வரிகள் படர்ந்திட்ட கயற்கண் ணாளைச்
சிந்தையிலே படரவிட்டான்; பிரிவுத் துன்பம்
அவ்வேளை போர்தொடங்கத் தொடர்ந்து செல்ல
அடியெடுப்பான், வந்தவழி தனையும் பார்ப்பான்!
திவ்வியநல் மதுரத்தை, தீம்பாகைத்தான்
திரும்பவுமே அடையும்நாள் எந்நாள்' என்று—

39 நெஞ்சத்தில் நினைவாட வழிகள் எல்லாம்
நின்றெண்ணிச் சோர்ந்துபின் அலைகள் பாடும்
கொஞ்சுதமிழ் மாமல்ல புரத்தைச் சேர்ந்து
கோமன்னன் வீற்றிருந்த அவையின் முன்னர்
நெஞ்சமதில் எழுந்தஉயர் வணக்கம் கூறி
'நிலமுழுதும் ஆளும்மா மல்லை வேந்தே!
தஞ்சைநகர் தனில்பிறந்தேன், தங்கள் ஆணை
தனைக்கேட்டே வந்துள்ளேன் எளியேன் சிற்பி!

40 தில்லையிலே கூத்தாடும் இறைவனுரின்
திருநாமம் என்நாமம்! வேந்தே, நாட்டின்
எல்லையிலே இஞ்ஞான்று குடும்பத் தோடே
இருக்கின்றேன்! இந்நாளில் சிற்ப மாக்கக்
கிள்ளைமொழி மாதினையும் விடுத்து நீளக்
கீழ்த்திசைக்கே வந்துள்ளேன்; சிற்பமெல்லாம்
உள்ளத்தைக் கவர்ந்திடவே வடித்துக் காட்ட
உம்ஆணை தனைஏற்றேன் என்று நின்றான்!

41 பெருநகைப்பைக் கோமன்னன் சிந்தி விட்டுப்
'பேரறிஞர் பலர்போற்றும் சிற்பி யே,உன்
வருகையினுல் யாம்மகிழ்ந்தோம் கல்லில் சிற்பம்
வடித்திடுவாய் நாளைமுதல் என்று கூறி
இளஞ்சிற்பி தனக்குநல் இருக்கை யோடும்
இன்னமுதும் நல்லுடையும் நல்கி, வேந்தன்
இளம்பரிதி எழுந்திடுமுன் நாளைச் சென்றே
இனியபணி தொடங்கிடுவாய் என்றுரைத்தான்!

42 'அப்படியே ஆகட்டும் மன்னா! என்றே
அவன்வணங்கிப் புறம்சென்றே அலைகள் தாவும்
ஒப்பரிய கடற்கரையை அடைந்தான்; ஆங்கே
உருவமைக்கும் கற்களையே உற்று நோக்கி

என்மனத்தில் பதிந்திட்ட அன்பைக் குன்ரு
எழில்ததும்பும் ஓவியத்தை, உளியெடுத்துக்
கன்னல்நிகர் மொழியாளை உலகோர் போற்றும்
கற்சிலையாய் வடித்திடுவேன்' என்றே நெஞ்சில்—

43 நினைத்தவனுய் நின்றிருந்தான், சிந்தை எல்லாம்
நெஞ்சினிலே பூத்தஅந்த நிலவை எண்ணி!
“எனைவிடுத்தே போய்விட்டீர் அத்தான்! இன்னும்
இறக்கவில்லை! இறப்புநிலை எய்தி விட்டேன்”
என்றந்தத் தேன்மொழியாள் இயம்புதல்போல்
இதயத்தில் எண்ணமிட்டான்; ‘ஒருநாள் கூட
இன்றுவரை ஆகவில்லை பிரிந்து வந்தே
இதற்குள்ஏன் நெஞ்சேநீ வாடு கின்ருய்!'

44 ‘குன்றத்துத் தேனே!தேன் சிந்தும் பூவே!
கொத்துமலர்க் குழல்தேவே! கொம்புத் தேனே!
நன்றெனவே வியக்கஉன்றன் எழிலை இங்கு
நாளைமுதல் நான்வடிக்கப் போகின்றேன், பார்!'
என்றிதயம் தனிலெண்ணி நடந்து சென்ருன்
இருப்பிடத்தை அவன்நோக்கி! பொழுதும் சாய்ந்து
கன்றெல்லாம் தாய்ப்பசுவைக் காண எண்ணிக்
கரைகின்ற புன்மாலை வேளை தன்னில்—

45 படுக்கையினை விரித்துவிட்டுப் பாங்காய் ஆங்கோர்
பழஞ்சுவடி தனையெடுத்துப் படிக்க எண்ணிப்
படுத்திட்டான் தனிமையிலே விட்டு வந்த
பைங்கிளியை மனக்கூண்டில் தவழ விட்டு!
காவிரிதான் பாய்விரிக்கும் காட்சி நெஞ்சக்
கண்களிலே தேன்மழையை வாரிக் கொட்ட,

பூவிறைத்த மஞ்சத்தில் புழுவைப் போலப்
புரண்டிட்டான்! இறுதியிலே உறங்க லானான் !!

[மறுநாள் அதிகாலையில் நடராசன் கடற்கரை சென்று சிற்பம் வடிக்கத் தொடங்குகிறான்]

46 காலையிளம் பரிதியெழும் முன்னெழுந்து
கடற்கரையை நடராசன் அடைந்து நின்றே
சோலைமலர் போல்சிரித்தே இன்பத் தேனைச்
சொரிந்தென்னை வாழ்வித்துத் துணையாய் நின்று
மாலைமணிச் சுடரோன்போல் ஒளியை வீசும்
மலர்முகத்தாள் காவிரியாய் உருவெடுக்க
ஏலுகின்ற கல்யாதோ என்று தேடி
இறுதியிலே ஓர்கல்லைத் தேர்ந்து நின்றான்!

47 இடையினிலே வைத்திருந்த உளியெடுத்தே
எதிர்நின்ற கல்லில்சிலை வடிக்க லானான்
புடம்போட்ட உளியேந்தி அவன்கரங்கள்
போராடிப் போராடி உருவமைக்க
மனமதிலும் வாழ்வினிலும் அங்கம் பெற்ற
மலர்ந்தவிழிக் காவிரியைக் கல்லில் பெய்து
கனவினிலும் நனவினிலும் நாட்கள் போக்கி
கற்சிலையின் முற்பகுதி முடிக்க லானான்.

48 இப்படியே நடராசன் தனது நெஞ்சில்
இடம்பெற்ற காவிரியின் எழிலைக் கொட்டி
ஒப்பரிய சிலைவடித்து நிற்கும் போதாங்
கோர்நாளில் மன்னவன்தன் சுற்றம் சூழ
செப்பரிய சீருடைய சிலையைக் காணச்
சேர்ந்திட்டான் கடற்கரையை! கண்ணாலந்த
ஒப்பரிய சிலைகண்டே உளம்பூரிப்ப
உணர்விழந்த நிலையினிலே வியப்பில் வீழ்ந்தே—

49 'அற்புதமாய்ச் சிற்பத்தை வடித்து விட்டாய்
அருமையடா! எனவியந்த அரசன் கேட்பான்
எத்திசையி லேனுமிந்தச் சிலையில் கண்ட
எழில்மாதைப் பார்த்ததுண்டோ?' என்றான்; சிற்பி
'இலையரசே இதுபோன்ற நங்கை தன்னை
என்விழியால் கண்டதில்லை! என்றன் சிற்பக்
கலையகத்தே பூத்ததொரு எழிலையேநான்
கற்சிலையாய் வடித்துள்ளேன்'என்றார் பொய்யை-

50 மன்னனிடம் உரைத்திட்டான் உளத்தில் "யானும்
மாதவள்தான் என்துணைவி என்றுரைப்பின்
என்னவளை ஒருவேளை இழக்கநேரும்!"
என்றெண்ணித் தான்சொன்ன பொய்யை
வாழ்த்திப்
பின்னவன்தன் காதலியின் சிலையைப் பார்த்துப்
பேரெழிலை ஓரளவே படைத்து வைத்தேன்
மன்னவனும் அவளையொரு வேளை பார்த்தால்
மலைத்திடுவான்! எம்கதையை அறிந்துகொள்வான்

51 என்றங்கு நடராசன் எண்ணும் வேளை
ஈடில்லா மன்னவனும் சிலையின் மீது
நின்றங்கு வைத்திட்ட விழியை மீட்க
நினைவற்றான் போல்நெஞ்சம் அதனோடொன்றிக்
கலைப்பொய்கை தனில்பூத்த மலராய் நிற்கும்
காவிரியின் எழிலேந்தும் சிலையைக் கண்டு
மலைப்பெய்தி நடராசன் அருகில் சென்று
மாமன்னன் உரைத்திடுவான் கலையைப் போற்றி

52 'கற்சிலைதான் என்றாலும் இதனில் வாழும்
கவின்சிறப்பை என்னென்பேன்? மண்ணைத்தங்கள்
விற்றிறத்தால் வென்றாளும் அரசர் தம்மின்
வெற்றியுமே ஓர்நாளில் வீழக் கூடும்

வற்ருத தோள்வலியால் பகைமை வென்று
வளநாட்டை வாள்வலியால் ஆளும் மன்னர்
புற்றீசல் போல்விழுந்தே இந்த மண்ணுள்
புகநேரும் என்ருலும் கலைஞர் தங்கள்

53 'சிற்றுளியால் உருவாகிக் கவிதை பேசும்
சிற்பத்திற் கழிவுண்டோ, சிதைத்தாலன்றி!
முற்பகுதி தான்வடித்தாய் என்ற போதும்
முகமலரின் அழகைத்தான் சொல்லப் போமோ?
முகமலரின் கீழமைந்து விம்மி நிற்கும்
மொட்டுப்போல் மார்பழகை விள்ளப் போமோ?
அகமலரில் பெருக்கெடுத்த கலைமணத்தால்
அழியாத எழிற்சிற்பம் வடித்து விட்டாய்!!

54 நின்கரமும் உடலும்தான் அழிந்த போதும்
நிலையாகி நிற்குமடா இந்தச் சிற்பம்!
உன்சிறப்பை, கலைத்திறனை இந்த ஞாலம்
உணர்ந்துபுகழ் பாடுதற்கிச் சிலையே போதும்!
பறப்பதற்குச் சிறகிருந்தும் கோழி என்றும்
பறப்பதனை இயல்பாகக் கொள்வதில்லை
இறப்பதற்குள் சிறப்படைந்து நிலைப்பதற்கே
எல்லார்க்கும் வாய்பிருந்தும் இயல்வதில்லை!'—

55 என்றந்தக் கோமன்னன் இயம்பி விட்டே
ஈடில்லாக் கலைத்திறனைப் போற்றிப் பின்னும்
நின்றிருந்த தன்அமைச்சர் சுற்றம் சூழ
நெஞ்சாரச் சிற்பியையும் மகிழ்ந்து வாழ்த்திச்
சென்றிட்டான் அரண்மனைக்கே; சிற்பி தானும்
சிலைவடிக்கும் தன்தொழிலைத் தொடரலானுன்
மன்றிட்ட தூயமணி விளக்கைப் போல
மாமல்ல புரத்திலவன் சிலையும் நிற்க—

56 'நன்ருக நான்சிலையை வடித்து விட்டேன்
நல்வேந்தன் என்ஆற்றல் அறிந்து விட்டான்'
என்றுமனம் தனிலெண்ணி மாலை வேளை
இருப்பிடத்திற் கவன்போக எழுந்த போது
நின்றிருந்தாள் காவிரிதான் அவன்தன் முன்னர்
நீங்காத காதலினுல் வாட்டம் எய்தி
இன்றிங்கு வந்திட்டாள் என்றே எண்ணி
இனியவளின் கரம்பற்றி உரைக்க லானுன்:

57 பூத்தமலர் சிரிக்கின்ற பொய்கை நீதான்
பொன்னருவி தவழ்மேனி நீதான்; எண்ணும்
மாத்திரத்தில் இனிக்கின்ற கவிதை நீதான்,
மலர்ச்சரம்நீ வண்பவளக் கோவை நீதான்
தித்திக்கும் தேன்குடமும் நீதான், இன்பம்
தெளிவாகக் காட்டுமொளி விளக்கும் நீதான்
சித்திரம்போல் மனத்திரையில் படிந்து விட்ட
செந்தமிழே! என்னுறவின் உச்சி நீதான்!!

58 'புன்னகையில்மதுக்குடத்தைப் புதைத்துவைத்தாய்
போதையினை விழிகளிலே தேக்கி வைத்தாய்!
என்னுடலின் அணுவிலெலாம் உணர்வைப்பாய்ச்சி,
இதயத்தோ டென்னையும்நீ ஈட்டிக் கொண்டாய்!'
என்றுமனக் காதலினுல் அவளைப் போற்றி
இன்முத்தம் பலஈந்தும் தனது முன்னே
நின்றிருந்த அவளழகால் உணர்விழந்து
நெடுநேரம் கடந்ததன்பின் அவளை நோக்கி—

59 'நான்வடிக்கும் சிலைக்குணர்வே இல்லை என்றே
நான்முகனுர் வடித்தசிலை நீஏன் வந்தாய்?
கான்வழியும் கள்ளர்துயர் இவைகடந்து
கற்கண்டே எப்படிநீ வந்தாய்?' என்று

தேன்சிந்தும் இதழுடையாள் தன்னைக் கேட்கத்
தெளிவாகக் காவிரிதான் உரைக்க லானாள்.
நான்எல்லைப் புறமிருக்கும் நமது வீட்டில்
நினைவெல்லாம் நீராக இருந்தேன்; ஓர் நாள்—

60 எனைத்தேடி அலைந்திட்ட எனது பெற்றோர்
எல்லையிலே நாம்வாழும் இருப்பிடத்தை
மனத்தளவே அறிந்திட்ட போதே தப்பி
மானைப்போல் ஓடிவந்தேன் அத்தான்! ஆட்கள்
எனைத்துரத்தி வருகின்றார் பின்னால்; இங்கே
இருப்பதுமே பெருந்தவறு தப்பிச் செல்வோம்
கனிவான நம்காதல் காவியத்தைக்
கண்காணா இடத்தினிலே வளர்த்து வாழ்வோம்!

61 என்றந்தப் பூங்கொடியாள் இயம்பும் வேளை
இறையான மன்னவனின் இளம்அமைச்சன்
கொன்றுபிறர் வாழ்வழிக்கும் கொடுங்கோல் மாந்தன்
குடிவெறியால் தள்ளாடி ஆட்களோடு
கலைமகள்வாழ் உள்ளத்தான் நடராசன்தன்
கைத்திறத்தால் எழுந்தஉயர் சிற்பம்காண
அலைகடலின் ஓரத்தில் வந்துநின்றே
அயர்ந்திட்டான் காவிரியைக் கண்ணால் கண்டே!

62 உரியதொரு கூண்டினிலே இருக்கை கொண்டே
உளம்கவர எழில்சிந்தும் மணிப்புறாவை
நரிகண்டு நிற்றல்போல் நின்றான்; தீய
நச்சரவை ஒத்தஅவன் காமத் தால்கா
விரியிடத்தில் சென்றுகொடும் நகைப்பைச்சிந்தி
வேல்விழியாள் தனைப்பற்றிக் கோழிக்குஞ்சை
பருந்துகொளல் போற்கொண்டு செல்லஎண்ணிப்
பாவையவள் பக்கம்போய் பல்லிளித்தே

63 ஊர்வசிபோல் எழில்சிந்தி இங்கு நிற்கும்
ஓவியமே! உனக்கென்றன் வணக்கம்! யானே
போர்க்களத்தில் பகைவென்று வாகை சூடிப்
புகழ்பெற்ற இளம்அமைச்சன்; இந்த நாட்டைப்
பார்புகழ ஆளும்மா மல்லனுக்குப்
பக்கநிற்கும் மிக்கமறம் பெற்ற பாங்கன்!
வார்குழமே உனைக்கண்டேன் மயக்கம்கொண்டேன்
மனம்வைப்பாய் என்னிடத்தில்! வாழவைப்பாய்!!

64 மதுக்கிண்ணம் நாமேந்தி மலர்கள் பெய்த
மஞ்சத்தில் கொஞ்சிடுவோம், இன்பம் துய்ப்போம்!
எதற்கின்னும் இவ்விழிந்த சிற்பி முன்னர்
இருக்கின்றாய், தேனமுதே! வாவா!' என்றான்
புதுப்புனல்போல் பொங்கியவள் காறித்துப்பிப்
'போடாபோ மூடனே நீ போபோ' என்றாள்
'விதிர்ப்புற்றே எனையிகழ்ந்தாள் இச்சிறுக்கி
விலங்கிட்டுச் சென்றிடுவீர் இவளை நீங்கள்!'–

65 என்றவன்தன் ஆட்களுக்கே ஆணை இட்டான்
இருவருடன் வந்தவளைப் பிடிக்கலானார்
நன்றிதுவோ எனப்பொங்கிச் சினந்தானுற்ற
நடராசன் உளியெடுத்தே ஓடி வந்தான்!
உருவியுடன் வாளெடுத்தே இளம்அமைச்சன்
உறுமினான் ஆட்கள்உடன் ஓடிவந்தார்
குருவியினைப் பிடிப்பதுபோல் பிடித்தே அங்கே
குருதிவர நடராசன் தனைப்புடைத்தார்!!

66 அடிபட்ட நடராசன் கீழே வீழ்ந்தான்
அவ்வமயம் காவிரிதான் ஓடி வந்தாள்!
பிடிபட்டாள் அக்கொடிய ஆட்கள் கையில்
பேதலித்தாள்! தன்நெஞ்சு விம்மலுற்றாள்!

நீதறியா என்தலைவன் தனைப்புடைத்த
திமிர்பிடித்த கொடியவர்காள், எம்மை விட்டுப்
போதலினைச் செய்திடுவீர்' எனப்புலம்பிப்
புழுப்போலத் துடித்தழுதாள்! சிற்பி சொல்வான்

67 'எழுதாத சித்திரமே இன்பப் பாட்டே
என்னிடத்தில் இருந்துன்னைப் பிரித்தே நீதி
வழுவிடுவார் இவரெல்லாம் என்றபோதும்
வாழ்ந்திடுவேன் உனைமீட்க! வஞ்சம்தீர்க்க!!
அழுகின்றேன் உனக்காக என்றபோதும்
அஞ்சவில்லை இவர்தமக்கே! நேர்மை என்றும்
வழுவாத தமிழ்மக்கள் வாழும் நாட்டில்
வஞ்சகரின் செயல்யாண்டும் வெல்லப் போமோ?

68 கல்லைத்தான் திருத்திஉயர் சிற்பத்தைத்தான்
காட்டுகின்ற தொழிற்கலைஞன் என்றபோதும்
பொல்லாதார் இவர்தம்மை ஒழிப்பதற்கே
புறப்பட்டேன் பூங்கொடியே! உனைப்பிரிந்தால்
இல்லைஉயிர் என்றாலும் இவரை மாய்க்க
இருக்கின்றேன் ஒளிநிலவே வருந்தாதேமா
மல்லையிலே நீதியுண்டா? இல்லைஇந்த
மணலோடு கல்தானா? என்ற உண்மை—

69 கண்டறிய அரசனிடம் இன்றே செல்வேன்
கயவரிவர் தீச்செயலை எடுத்துரைப்பேன்
வண்டினங்கள் ஆடத்தேன் மருவுகின்ற
வாசமலர்ப் பூங்கொத்தே அஞ்சல் வேண்டாம்!
பெண்டிர்க்கோ உயிர்கற்பாம் உனக்குமந்தப்
பெரும்கற்பே காவலென நிற்கட்டும்போ!
மண்ணகத்தை ஆளும்மா மல்லை வேந்தன்
வழுவாத செங்கோல்கொண் டுன்னை மீட்பேன்!

70 என்றந்தச் சிற்பியும்தான் இயம்பி விட்டே
ஈரடிதான் வைத்திடுமுன் பொல்லார் கூட்டம்
நன்ருகப் புடைத்திட்டார்! புடைத்துப் பின்னர்
நடுத்தெருவில் வீசிடுவீர் நாயை' என்றே
சொல்லிப்பின் தூசைத்தான் வீசல்போலத்
தூக்கிஒரு புறம்வீசி நடக்க லாஞர்
மல்லிகைப்பூத் தூங்குதல்போல் மங்கைநல்லாள்
மயக்கமுடன் அவர்தோளில் தொங்கலாஞள்!

71 மயக்கமுடன் கிடந்திட்ட நடராசன்பின்
மனம்பதறி எழுந்திட்டான் சினமும் கொண்டான்!
தயக்கமினிக் கொள்வதுமே மடமை யாகும்
தவருது மன்னனிடம் சென்றிப் போதே
இளம்அமைச்சன் தன்செயலை எடுத்துரைத்தே
என்னவளை உடன்மீட்க வேண்டும் என்றே
வளம்வாய்ந்த இந்நாட்டின் வேந்தன் முன்னர்
வைத்திடுவேன் என்வழக்கை எனப்புலம்பி- -

72 'அலைகடல்தான் பொங்கிவந்து கரையரித்தால்,
அழுதகண்ணீர் அரசழிக்கும்! நீதி கூறும்!
சிலைவடிக்கும் என்வழக்கை இந்த நாடு
சீச்சீஎன் றிகழ்ந்தாலோ நீதி சாகும்!'
என்றந்தச் சிற்பிபொங்கும் சினத்தி ஞலே
எரிதழல்போல் சொற்பொறிகள் எடுத்தெறிந்து
நின்ருன்பின் நிலைகுழம்பி நினைவிழந்தே
நெஞ்சத்தில் நேரில்லா வேந்தன் முன்னர்-

73 அன்றவனும் உரைத்திட்ட பொய்யை எண்ணி
அயர்ந்திட்டான்! அத்தோடும் 'புல்லமைச்சன்
முன்னர்நம் வழக்கெல்லாம் பொய்யாய்ப் போகும்
முன்ஞளில் காவிரியைக் கடத்தி வந்த

குற்றம்தான் வெளியாகும்; பின்னர் அந்தக்
கொடுஞ்சிறையின் கூண்டினுக்குள்
கிளியாய்ப்போவோம்!
கற்பிலுயர் காவிரியும் எனைப்பிரிந்து
கடல்பட்ட துரும்புபோல் நொந்து சாவாள்!

74 'இரவினிலே தன்விழியை விளக்காய் ஆக்கி
இருட்டறையில் உணவடையும் பூனை போல
அரசபலம் தனைக்கொண்டே இந்தப் பொல்லா
அமைச்சனுமே காவிரியை அடையக் கூடும்!
காதலினால் ஓடிவந்த எனது செய்கை
காவிரியைக் கடத்திவந்த குற்றமாக
தீதல்புரி அமைச்சனுமே மாசில்லாத
தேர்வேந்தன் தன்னிடமும் சாற்றக் கூடும்!

75 'ஏழையின்மேல் குற்றத்தைச் சாற்றுதல்போல்
எளியசெயல் இவ்வுலகில் வேறும் உண்டோ?
வாழைதரும் கனியின்தோல் உரிப்பதைப்போல்
மன்பதையில் எளியவர்தோல் உரிப்பரன்றோ?
இமைக்கதவை மூடிவிட்டே உறங்கல்போல
இதயத்தின் கதவுகளை மூடிவிட்டுச்
சுமைசுமையாய்ப் பழிசெய்து பலத்தினாலே
தீயவர்கள் நீதியினை உறங்கச் செய்வார்!

76 'தாண்டவமே புரிகின்ற தீக்கொழுந்தை
தழுவிமனம் மகிழ்பவர்கள் உலகில் இல்லை
ஈண்டியசீர் வாய்த்தபெரு வைரம் கூட
எரிதழலில் வீழ்ந்திட்டால் கரியாய்ப் போகும்!
காவியுடை தரித்திட்ட சாமி யாரும்
கன்னியரை நள்ளிரவில் களவிற் கூடும்
பாவியரின் உலகமிதாம் இதிலே நீதி
பகற்பொழுதில் கூடஇருண் டேதான் நிற்கும்!

77 'பனித்துளியைத் தாங்குதற்கும் இயலாப் புல்போல்
பதரைப்போல் திறனற்றே ஆண்மை யற்று
மனத்துணிவை இழந்தவராய் உலகில் வாழும்
மறமற்ற பேடிகளால் பயன்தான் என்ன?
இனிப்பொறுத்தல் நலமில்லை விரைந்து சென்றே
என்னவளை இன்றிரவே மீட்க வேண்டும்!!
கனிச்சாரும் காவிரியைப் பாழ்அமைச்சன்
கைநீட்டித் தொடுவதற்குள் தப்பவைப்பேன்!'

78 என்றுமனம் தனிலெண்ணிக் 'கொடியோன் வாழும்
இருப்பிடத்திற் கேசென்று தானே மீட்டல்
நன்ருகும் என்றெண்ணி விரைந்து தாவி
நடந்திட்டான், உடலெல்லாம் குருதி பொங்க!
அன்றிரவே அடல்அமைச்சன் இருப்பிடத்தை
அவனறிந்தான்! காவிரியைத் தப்பா தங்கே
இன்றிரவே வைத்திருப்பான் காவல் போட்டே
இடர்வரினும் அதைவென்று மீட்பேன் என்றே—

79 இரவினிலே அவன்மறைந்து மறைந்து நங்கை
இருப்பிடத்தை அறிந்தான்தன் கரமுயர்த்தி
வருகையினைத் தெரிவித்தான், அவள்மகிழ்ந்தாள்!
மறைவிடத்தில் நின்றிருந்தான், நேரம் பார்த்து
நடுநிசியில் அனைவருமே உறங்கும் வேளை
நடராசன் மெள்ளநுழைந் துள்ளே சென்று
கொடியிடையாள் தனைக்கொண்டு தப்பிச்சென்ருன்
குறட்டைவிடும் வீரர்களும் விழித்தெழுந்தார்!

80 அவ்வேளை பெருத்ததொரு மழையும் காற்றும்
அடித்ததடா, கொந்தளிப்புக் கடலில் தோன்ற!!
செவ்வாழைக் கனியொத்தே சிறந்துநின்ற
சேல்விழியாள் தன்னோடு கலையின் வேந்தன்

கவ்வியதோர் காரிருளில் கடுகிச் சென்றான்!
காலடியின் ஓசையினால் பின்னா லந்த
ஒவ்வாத செயல்செய்த பொல்லார் கூட்டம்
உடன்துரத்தல் அறிந்துகடற் கரைக்கு வந்தார்!!

81 சிந்துகின்ற மழைத்துளிகள் மேலே வீழ
சீறுகின்ற புயற்காற்றில் இருவர் தாமும்
வந்தவழி அன்றிவழி காணா ராகி
வந்ததனை அக்கொடியோன் ஆட்கள் கண்டார்!
இந்தநிலை தனிலிங்கே நாமிருத்தல்
இடராகும் என்றியம்பிப் படகில் ஏறிக்
கொந்தளிக்கும் கடலினிலே இலங்கை நோக்கி
கொந்தளிக்கும் மனத்தவராய்ச் செல்ல லானார்!

[காலை இளம்பரிதி மறுநாட்காலை கவின் கொண்டெழுகிறது. மாமல்லனும் காவிரியின் பெற்றோரும் கடற்கரைக்கு வருகின்றனர்]

82 வரிக்குயில்தன் தீங்குரலால் கீதம் பாட,
வண்டினங்கள் இன்னொலியால் தாளம் போட;
வருகவென இளங்கதிரை வாழ்த்தி, மல்லை
வார்கடலும் தன்னலையை வீசி நிற்க:
உளமிரண்டு நல்லமைதி பெற்றதைத்தான்
உரைப்பதுபோல் செங்கதிரோன் எழுந்தான் காலை!
வளநாடாம் பல்லவர்கள் நாட்டின் மீது
வைத்திட்டான் சுடர்க்கரத்தை வானில் சென்றான்!

83 கடலோடு நதிகலக்கும் காட்சி அந்தக்
காவிரியை நடராசன் அழைத்துச் சென்று
படகேறி விரைவாகப் பாய்ந்து தாவிப்
பரந்தஅலை அரவணைப்பில் கலந்தா ரென்றே

அவருள்ளம் அமைதியுற்ற உண்மையைத்தான்
அறைவதுபோல் ஆழ்கடலும் அமைதியாக
புவனத்தைக் கண்டுமனம் மகிழ்ந்ததென்னப்
புரண்டலைக்கை வீசிவிளை யாடி நிற்க—

84 அரைகுறையாய் நடராசன் வடித்து வைத்த
அவன்துணைவி காவிரியின் சிலையும் அந்தத்
திரைகடலைப் பார்த்தென்றும் சிரிப்பதைப்போல்
சிரித்தபடி நின்றதுகாண் உணர்ச்சி யற்று!
'கார்முகில்தான் பலபிரிவாய்ச் சிதறி அந்தக்
காதலரைக் கடலகத்தில் தேடு தற்கே
ஊர்ந்ததுவோ வானரங்கில்' எனவியந்தாள்
உலகமெனும் பூமடந்தை! பின்ன ரந்தக்—

85 கார்முகில்தான் வார்துளியைச் சிந்திச் சிந்திக்
கண்ணீரைக் கொட்டியதேன் யாரிறந்தார்?
பார்அறியச் சொல்லாயோ? என்றே பூமி
பதறல்போல் உள்வேர்த்த ஆவி பொங்க
நீர்ப்பரப்பும் நிலப்பரப்பும் அமைதி யுற்று
நீண்டதொரு காலையினைக் கடக்க அந்தப்
பார்புகழும் மாமல்லன் அவைக்கு வந்து
பழுதறியா அரியணையின் மீதமர்ந்தான்!

86 'நீதியொளிர் மாவேந்தே, உம்மைக் காண
நிகரில்லாத் தஞ்சைநகர் தனிலிருந்து
சேதிசில கூறியுடன் நீதி வேண்ட
சிலருன்றன் வாயிலகம் நிற்கின்றார்கள்!'
என்றந்த வாயிலோன் வந்துரைக்க
இங்கவரை அனுப்பிடுவாய் என்றான் வேந்தன்
பின்னரிரு பெரியவர்கள் வந்து தங்கள்
பெயரோடு வணக்கமுமே தெரிவித்தார்கள்!

87 'எம்முடைய திருப்புதல்வி நிகரில்லாத
எழில்வாய்ந்த கனியையொரு கலைவலாளன்
பொம்மெனவே அஞ்சாமல் கடத்திச் சென்றுன்
புலனுடிப் பிடிப்பதற்கே முடியவில்லை!
அன்னவன்தான் இவ்வூரில் சிலைவடிக்கும்
அரும்செய்தி யாமறிந்தே ஈங்குவந்தோம்'
என்றந்தப் பெரியவர்கள் நிகழ்ந்ததெல்லாம்
எடுத்தியம்பக் கேட்டமா மல்லன் சொல்வான்.

88 நன்றிதுகாண் அவருள்ளம் ஒன்றித் தங்கள்
நாட்டைவிட்டே ஓடிவிட்டார், தவறு யாதோ?
இன்றிங்கு நீருரைத்த காதை நந்தம்
இலக்கியத்தில் 'உடன்போக்கு' முறையைச் சாரும்!
பொன்ருத கலைத்திறத்தால் அறிஞர் போற்றும்
புகழ்வாய்ந்த நடராசன் இழிந்தோன் என்ருல்
இன்றிந்த உலகத்தில் வாழும் எல்லா
இன்னுயிரும் இழிவுடைய தாகும் அன்ருே?'

89 இவ்வாறு மன்னவனும் மொழிஇயம்பி
ஈடில்லாக் கலைத்திறத்தால் புகழைப் பெற்ற
அவ்வறியன் உயர்கலைஞன் அதனுல் இந்த
அரசாட்சி அவன்வாழ்வை சிறக்கச் செய்யும்!
என்றுரைத்தான்! எழிலார்ந்த சுற்றம் சூழ
ஏகினன் கடற்கரைக்கு நடராசன்தான்
நன்றிந்தச் சிலைவடித்த கலைஞன் என்று
நன்மனத்தோ டன்னவன்மீ தார்வம் பூண்டே!

90 கடற்கரையை அடைந்தமா வேந்தன் அந்தக்
கவின்சிலையைக் கண்டவா றுரைப்பான்! 'என்ன
உடற்பொலிவும் உயிர்ப்பொலிவும் இச்சிலைக்கே
உருவாக்கி வைத்திட்டான்' எனவியந்தான்!

உடன்வந்த காவிரியின் தந்தை அங்கே
உரைத்திட்டார் 'ஈதெங்கள் குடியுதித்த
மடந்தையவள் காவிரியின் சிலையே யாகும்
மன்னவரே' எனநின்ருர் அரசன் பின்னர்—

91 கடற்கரையில் விழிபாய்ச்சிக் கலைவலானைக்
காண்கிலமே எனக்கலங்கி எங்கேசென்ருன்?
எடைக்கெடைதான் பசும்பொன்னை அள்ளி அந்த
ஈடில்லாக் கலைஞனுக்குப் பரிசாய் நல்க
வேண்டுமடா! எனமொழிந்தான் அலையை வீசி
வெம்பிவிழும் கடலகத்தே இணைந்த யாக்கை
பூண்டுவரும் காட்சியினைக் கண்ணுல் கண்டே
புலம்பினுன் ஓடினுன் கடலை நோக்கி!

92 இயற்கையன்னை மேகத்தால் தீட்டிவைத்த
எழிலோவி யம்அழிதல் போலழிந்த
கயற்கண்ணுள் காவிரியைக் கண்டான், சிற்பக்
கலைஞனெடு பிணமாய்அக் கடலின் ஓரம்!
விரட்டிவந்த பகைப்புயற்குத் தப்பிச் சென்று
வேதனையால் உளம்வெந்தே உலகமென்னும்
இருட்டறையில் பூத்தஅந்த இரண்டு பூக்கள்
இணையாக உதிர்ந்ததனைக் கண்டு நொந்தான்!

93 "தேனூறும் செவ்விதழால் இருவர் நெஞ்சை
தித்திக்கச் செய்வதுதான் காதல் முத்தம்
மானிடரை இவ்வுலக வாழ்வினின்றும்
மயக்கொழித்து மீட்பதுதான் சாவின் முத்தம்"
என்றந்தக் கோமன்னன் இயம்பி ஈடில்
இருதுளிவெங் கண்ணீரை உதிர விட்டு
நின்றபடி சிரிக்கின்ற சிலையை நோக்கி
நிமிர்ந்திட்டான்! சுற்றத்தார்க் குரைக்க லானுன்—

94 உள்ளத்தில் வெள்ளமெனப் பெருக்கெடுத்த
உயர்கலைக்கும் மெய்யான காதலுக்கும்
அள்ளுகின்ற எழில்வாய்ந்த இச்சிலைதான்
அவனியின்கண் அழியாத "நினைவுச் சின்னம்"
ஆகட்டும்! வள்ளுவனார் வகுத்துச் சொன்ன
அறநெறியால் உலகத்தில் தீமை மாய்ந்தே
போகட்டும்! செந்தமிழ்த்தாய் அடிகள் போற்றிப்
புகழ்வளர்ப்போம் தாயகத்தின் மேன்மைகாப்போம்!



## இந்தக் காவியத்தின் உள்ளே சில வரிகள்

அலைகடலில் ஒளிசிந்தும் முத்திருக்கும்; அவள் சிரிப்பில் முத்தொளியின் சத்திருக்கும்.

* * *

பூத்ததொரு மலராக விளங்கும் உன்னை ஒரு நொடியும் பிரியத்தான் உள்ளம் இல்லை.

* * *

கூந்தலுக்கு மலரானீர், கண்களுக்குக் குளிர்ச்சி தரும் உருவானீர், அத்தான்! இந்த ஏந்திழைக்கோ உயிரானீர்! நெஞ்சக்காதல் இருவரையும் இணைத்திடவே ஓடி வந்தோம்.

* * *

**செல்வி பதிப்பகம்**

காரைக்குடி-1.

மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை — 1391.